# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - ஆடி - 2018 - ஜூலை



நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி
முதல் ஆண்டு வகுப்புகள் தொடக்க விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

விளம்பி - ஆடி - 2018 - ஜூலை இதழ் - 73

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

**பொருளடக்கம்**



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்

# இறை வணக்கம்




வண்டமர்ந்த குழலாளை வானமரர் தொழுவாளை
வரைவேந்தன் பெற்றவளை வானத் திங்கள்
வந்த மைந்து வதனமென வயங்கு வாளை
வடிவழகுப் பெண்மயிலை வருவார் தம்மைக்
கண்டுவக்கும் காரிகையைக் கழனிநகர்க்
காதலியைக் கடலாடை உடுத்தவளைக் காளி யாகிக்
காசினியைக் காப்பாளைக் கற்ப கத்தைக்
கன்னிவன நாடாண்ட கயற்கண் ணாளைப்
பண்டைமறை அறியாத பார்க்கவியை மலைமகளாம்
பார்வதியைப் பரமனுக்குத் தார மான பத்தினியை
மறையறியாப் பண்பி னாளைப்
பழவடியார் பாடமகிழ் பாவை யாளைத்
தண்டமிழ்மா மதுரை நகர் ஆளவந்த மாதவளைத்
தன்னாட்சி சொக்கனுக்குத் தந்தாள் தன்னைத்
தனிப்பெரிய திருநெல்லை என்னும் தாயின்
தாள்பணிந்தால் நாமுயர்தல் திண்ண மன்றோ!

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்பஞான தேசிக சுவாமிகள்**

தனக்கு இயல்பான பழக்க வழக்கங்களைக் கொண்டு வாழ்க்கை நடத்துகின்ற காலத்திலே மனச்சஞ்சலமோ, துயரமோ ஏற்படுவதில்லை. அதே போல அதீத மகிழ்ச்சியும் வருவதில்லை. ஒரு குறிப்பிட்ட குறுகிய வளையத்திற்குள்ளே இயங்க வேண்டிய கட்டாயமோ, அழுத்தமோ நேருகின்ற காலத்திலே கண்டிப்பாக மனதில் பதட்டமும், அதன் காரணமாக மனத்துயரும், சோர்வும் ஏற்படுகின்றன. இந்த நிலையை யாவரும் அவர்களுடைய அன்றாட வாழ்க்கையிலே சந்தித்திருப்பார்கள்.

ஒரு குறிக்கோளும் இல்லாத வாழ்க்கையும் தொண்டு உள்ளம் சேராத பண்பும், யாருக்கும் எவ்விதப் பயனும் அளிப்பதில்லை. வாழ்வில் அடைய வேண்டிய குறிக்கோளை, இலட்சியத்தை, பலமுறை சிந்தித்துத் தீர்க்கமாக முடிவு செய்து கொண்டு அதனை அடைவதற்கு வேண்டிய திட்டங்களை வகுத்து அதனைப் பொறுமையாக இயல்பாக அதிகச் சிரமமில்லாமல் கடைப்பிடிக்க ஏதுவாகச் செயல்முறைகளை அமைத்துக்கொண்டு செயல்பட்டால் திண்ணமாகக் குறிக்கோளை அடைய முடியும், சிறப்பாக உயர முடியும். கட்டாயம் காரணமாகவோ அல்லது கால மாற்றத்தின் காரணமாகவோ நாம் விரும்பியவற்றைச் செயல்படுத்த இயலவில்லை என்ற சூழ்நிலை யாவருக்கும் ஏற்படலாம். அதனால் துயரப்பட வேண்டிய அவசியமோ, சோகமடைய வேண்டிய கட்டாயமோ கிடையாது. நடைபெறாத செயல்பாடுகளை அதனை முயன்ற காலத்திலே ஏற்பட்ட அனுபவத்தின் வழியாக, வேண்டிய அவசியமான மாற்றங்களைச் செய்து காரியங்களைச் செயல்படுத்த முடியும். இதனால் சற்றுக் காலதாமதம் ஆகலாமே தவிர நமக்குத் தோல்வி கிட்டாது. ஏதோ ஒரு காரணத்தினாலே நாம் திட்டமிட்ட காரியங்கள் நிறைவேற வழியில்லை என்றாலும் வருத்தமடையாது அந்தச் செயலினாலே ஏற்பட்ட அனுபவத்தைக் கொண்டு நிறைவேற்றிக்

கொள்ளக்கூடிய மற்ற நல்ல காரியங்களை இலக்காகக் கொண்டு செயல்படலாம்.

பொதுவாக எந்தக் காரியத்தையும் பதற்றமின்றி நம்பிக்கையோடும், திடமான நெஞ்சோடும் செய்கின்றபொழுது தவறுகள் ஏற்பட வாய்ப்புக்கள் மிகக் குறைவு; நாம் செய்கின்ற காரியங்களிலே தவறுகள், பிழைகளும் நேர்வதற்கு முதல் காரணம் நம்பிக்கையின்மையும், பதற்றமுமே ஆகும்.

நாம் எவ்வளவு கவனத்தோடும், அக்கறையோடும் திட்டமிட்டு இருந்தாலும் சில நேரங்களில் தவறுகள் நேரலாம். அல்லது அவசரமாக சில செயல்களைச் செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்பட வாய்ப்புண்டு **(Crisis Management)**. அந்தச் சூழ்நிலையில் நம்மாலே இந்தக் காரியங்களை வெற்றிகரமாக முடிக்க முடியும் என்கிற தன்னம்பிக்கையோடு நம் இயல்பிலே சற்றே வேகமாகச் செய்தோம் என்றால் தவறுகள், பிழைகள் ஏற்பட வாய்ப்பு மிகக் குறைவு. எனவே தடம் தவறுகின்ற காலங்களிலே அவசரகாலத் திட்டமாக ஒரு மாற்றுத் திட்டத்தைச் செய்யத் திட்டமிடல் அவசியம்; நம்முடைய செயல்களிலே எக்காரணம் கொண்டும் பதட்டமோ, பொறுமையின்மையோ சேர்ந்துவிடாமல் கவனம் தேவை. தவறினால் தவறுகள் நேர்வது தவிர்க்க இயலாததாகிவிடும். இவை நமக்கும் துயரம்; நமக்கு உதவியவருக்கும் துயரத்தைக் கொடுக்கும்.

எந்தக் காரியத்தைச் செய்ய விரும்புகிறோமோ அதனை நம்முடைய இயல்பின் வழியாகத் திட்டமிட்டுச் செம்மையாகத் தொடர் முயற்சியிலே செய்தாலே வெற்றிக்கு வழிவகுக்கும். நம் மனதிற்கும் திருப்தியும் மகிழ்ச்சியும் கொடுக்கும்.

நாம் இயல்பாக முயலுவோமாக! வெற்றிகள் பெறுவோமாக!

ஆசீர்வாதங்கள்!

ஸ்ரீ சற்குருநாதன் துணை

## திருவருட்பா ஓர் ஆய்வு

### (புலவர். ஆறு.மெ. மெய்யாண்டவன்)

திரு + அருள் + பா திருவருட்பா ஆயிற்று, அருளாளர்கள் பாடும் அத்துணைப்பாடல்களும் அருட்பாக்கள் தாம், மூவர்பாடிய தேவாரமும், மணிவாசகர் பாடிய திருவாசகமும், இன்னும் ஆண்டாள் உள்ளிட்ட பன்னிரு ஆழ்வார்கள் பாடிய பாசுரங்களும் அருட்பாக்கள்தாம்.

எனினும் வடலூர் இராமலிங்க வள்ளற் பெருமானார் அருளிய பொருட் பொருத்தமும் பெயர்ப் பொருத்தமும் ஒருங்கே பொருந்தி அமைந்த திருவருட்பா தனிப் பெருமை உடைய தாய் விளங்குகிறது.

இது ஆறுதிருமுறைகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. முதல் ஐந்து திருமுறைகளும் புறத்தே வழிபடும் உருவ வழிபாடு பற்றிக் கூறுவன. ஆறாம் திருமுறை அகத்தே வழிபடும் அருவ வழிபாட்டை உணர்த்தும் பாடல்களைக் கொண்டது.

*பெற்றதாய்தனை மகமறந்தாலும்*
*பிள்ளையைப் பெறுந்தாய் மறந்தாலும்*
*உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்*
*உயிரை மேவிய உடல் மறந்தாலும்*
*கற்ற நெஞ்சகம் கலை மறந்தாலும்*
*நற்றவத்தவர் உள்ளிருந்தோங்கும்*

நமச்சிவாயத்தை நான் மறவேனே. இப்பாடல் இரண்டாம் திருமுறை புறவழிபாட்டை உணர்த்துவது.

அருட் பெருஞ்சோதி அகவல் அகவழிபாட்டை உணர்த்துவது. இது ஆறாம் திருமுறை.

*ஐயமும் திரிபும் அறுத்து எனது உடம்பினுள்*
*ஐயமும் நீக்கிய அருட்பெருஞ்சோதி*
*ஒன்றென இரண்டென ஒன்றிரண்டென இவை*
*அன்றென விளங்கிய அருட் பெருஞ்சோதி*

ஆயினும் ஜீவகாருண்ய ஒழுக்கமே (உயிர்களிடத்து அன்பு)

வள்ளலாரின் தலையாய கொள்கை. இவ்வுண்மையை, ஜீவ காருண்ய ஒழுக்கமே கடவுள் வழிபாடு எனக் குறிப்பிடுகிறார். இவ்வுண்மை,

ஜீவகாருண்ய ஒழுக்கமே சன்மார்க்கம், அருள் என்பது கடவுள் தயவு (கடவுள் காட்டும் கருணை) கடவுள் என்பது இயற்கை விளக்கம். (இயற்கையாய்த் தோன்றும் உயிர்களின் காட்சி) ஜீவகாருண்ய ஒழுக்கத்தின் சிறப்பை இதனால் அறியமுடிகிறது. மேலும் ஜீவகாருண்யம் என்பது ஜீவர்கள் தயவு. ஜீவகாருண்ய ஒழுக்கத்தினால் வரும் விளக்கமே கடவுள் விளக்கம் என்கிறார். ஜீவகாருண்ய ஒழுக்க உட்பகுதிகள் :

1. பசி ஆற்றுவித்தல்
2. கொலை, புலை தவிர்த்தல்

**பசி ஆற்றுவித்தல் :**

பசியினால் ஏற்படும் சொல்ல இயலாத் துன்பங்களை வள்ளலார் பிற உயிர்கள் பால் கண்டு இரங்கி உள்ளார். அதனால் தான் வாடிய பயிரைக்கண்ட போதெல்லாம் வாடினேன் என ஓரறிவு கொண்ட உயிர்களின் துன்பத்தைக் கண்டு துடித்திருக்கிறார், ஈடில் மானிகளாய் ஏழைகளாய் பசியினால் இளைத்தவர் தமைக்கண்டு தாமும் இளைத் திருக்கிறார். பசித்தோர் முகத்தைப் பாரா திருந்தேனோ? எனப்பதைப் புறுகிறார். உயிர்க் கொலையும் புலைப் பொசிப்பும் உடையவர்கள் எல்லாம் உறவினத்தார் அல்லர்; அவர் புறவினத்தார் என வள்ளற் பெருமான் கடிந்துரைக்கிறார்.

**நிறைவு :**

திருவருட்பா 5818 பாடல்களைக் கொண்ட ஒரு திருநூல், அருள் நூல், வள்ளலார் தந்த இப்பெருநூல் நமக்குத் தந்த விளக்கம், ஜீவகாருண்ய ஒழுக்கமே உண்மை இறைவழிபாடு என்பதாகும்.

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

இப்படிப் பலவாறு புலம்பும் பட்டினத்தார் தன் நெஞ்சோடு தனித்துப் புலம்புகின்றார். வாழ்க்கை நிலையாமை வருகின்ற செல்வம் முதல் அத்தனையும் நிலையாதவை என்றுணர்ந்த பட்டினத்தார், காதற்ற ஊசியும் வாராது காண் கடைவழிக்கே என்று திருவெண்காட்டு இறைவன் அவரிடமே குழந்தையாக வந்து உணர்த்திய ஞானத்தால் தான் சேர்த்த அத்தனை செல்வங்களையும் உதறிவிட்டுப் போனமையால் ஏற்பட்ட ஞானம் புலம்பலாக உருவெடுத்தமையால் வந்த சொற்கள் இவை.

அனைத்து வகையிலும் ஆசை கொள்வதற்கு நெஞ்சமே காரணம். ஆதலால் நெஞ்சை விளித்துக் கீழ்க்காணும் பாடலைக் கூறுகின்றார்.

நெஞ்சமே! மண்ணாசை, பொன்னாசை என்கின்ற மாய இருளைக் காட்டி மயக்குகின்றாய். நீ திருச்செங்காட்டில் ஆடும் சிவனைப் போற்றாமல், கண்களைக் காட்டி மயக்குகின்ற வேசியரை எண்ணிக் கடைத்தெருவில் அலையும் நாய் போல அலைகின்றாயே. இறைவனை வணங்கும் பேரின்பத்தை நினையாமல் சிற்றின்பத்தை நாடுகின்றதே நெஞ்சம் என்ற கீழ்க்காணும் பாடல் ஆதங்கத்தின் தொனிப்பொருளாக உள்ளதைக் காணலாம்.

*மண்காட்டிப் பொன்காட்டி மாயஇருள் காட்டிச்*
*செங்காட்டில் ஆடுகின்ற சிவனைப் போற்றாமல்*
*கண்காட்டும் வேசியர்தம் கண்வலையில் சிக்கிமிக*
*அங்காடி நாய்போல் அலைந்தனையே நெஞ்சமே!*

அடுத்ததாக அவர் நெஞ்சிற்குக் கூறுவது, நெஞ்சமே! பூக்கள் பரப்பிய அழகிய பட்டு மெத்தையின் மேல் ஒப்பாக அணிந்த பணிகளோடு அவை நீங்காமல் பாயில் கிடத்தி எமன் நம் உயிரைக் கவரும் முன்னர், எல்லாம் கடந்த பரவெளியில் உள்ள இறைவனை நினைந்து சேரவில்லையே என்ற துயர வெளிப்பாடே கீழ்க்காணும் பாடல்.

*புட்பஆசன அணையில் பொன்பட்டு மெத்தையின்மேல்*
*ஒப்பாக அணிந்த பணியோடு அணி நீங்காமல்*
*இப்பாயில் கிடத்தி இயமன்உயிர் கொள்ளுமுன்னே*
*முப்பாழைப் போற்றி முயங்கிலையே நெஞ்சமே.*

முப்பாழும் பாழ், அதற்கு அப்பாலும் பாழ், என்ற மொழிப்படி வெட்ட வெளியாய் அதற்கு அப்பாலும் பாழாய் நின்று ஆடும் இறையைப் போற்றி வணங்காமல் இப்பாழான இவ்வுலக வாழ்வை நிலையென நம்பி இல்லை என்னாது வந்தவர்க்கு ஒன்று கொடுக்காமல் வலிய வினைக்கு ஆளாகினையே! என்று இரக்கம் தொனிக்கப் பாடுகின்றார் பட்டினத்தார்.

*முப்பாழும் பாழாய் முதற்பாழ் வெறும்பாழாய்*
*அப்பாழுக்(கு) அப்பால்நின்(று) ஆடும் அதைப்போற்றாமல்*
*இப்பாழாம் வாழ்வைநம்பி ஏற்றவர்க்(கு) ஒன்(று) ஈயாமல்*
*துப்பாளாய் வந்தவினை சூழ்ந்தனையே! நெஞ்சமே!*

நெஞ்சமே! உணவின்றித் தவிப்போர்க்கு உதவக் கூடிய பிறப்பினை எடுத்தும் சிவன் அருளைப் போற்றாமல் பொன், மனை, அழகிய பெண்கள் ஆகியவற்றை நிலையென்று எண்ணினாயே என்று பொன்னாசை, மண்ணாசை ஆகியன நிலையானவை அல்ல என்ற கருத்தைக் கீழக் காணும் பாடல் கூறுகின்றது.

*அன்னம் பகிர்ந்திங்(கு) அலைந்தோர்க்(கு) உதவிசெயும்*
*சென்மம் எடுத்தும் சிவன்அருளைப் போற்றாமல்*
*பொன்னும் மனையும்எழில் பூவையரும் வாழ்வும்இவை*
*இன்னும் சதமாக எண்ணினை யேபாழ் நெஞ்சமே*

பாழாகிப் போன மனமே! முற்பிறவியில் செய்த செயலின் பயனால் கிடைத்த செல்வத்தை இந்த நாளிலும் பெற்றோம் என்று எண்ணாது அதனைக் கொண்டு இல்லாதோர்க்குக் கொடுக்காமல் மலர் கொண்டு இறைவழிபாடும் செய்யாமல், கற்றவர்க்கும் கொடுக்காமல் மறந்து விட்டாயே! என்பது கீழ் வரும் பாடற்கருத்து.

*முற்றொடர் பிற்செய்த முறைமையால் வந்தசெல்வம்*
*இற்றைநாள் பெற்றோமென்று எண்ணாது பாழ்மனமே*

*அற்றவர்க்கும் ஈயாமல் அரன்பூசை ஓராமல்*
*கற்றவர்க்கும் ஈயாமல் கண்மறந்து விட்டனையே!*

நெஞ்சமே! மாணிக்கமும், முத்தும், வயிரமும் வைத்து ஆணிப் பொன்னால் செய்த சிங்காதனத்தில் இருக்கின்ற வாழ்வு வரினும் கண்காணித்துக் கொண்டிருக்கும் எமன் நம்மைப் பிடித்துக் கொண்டு சென்ற போது காணியளவு பொன் கூட நம் கூட வாராது என்பதைக் கண்டு கொள்வாயாக! பிறந்த போது என்னைக் கொண்டு வந்தோம்? நாம் போகும் போது என்ன கொண்டு செல்வோம்? என்பதைக் கருத்தில் கொள்ள வேண்டும் என்ற கருத்தமைந்த பாடல் இது.

*மாணிக்கம் முத்து வயிரப் பணிபூண்டு*
*ஆணிப்பொன் சிங்கஆதனத்தில் இருந்தாலும்கண்*
*காணித்(து) உடலைநமன் காட்டியே கைப்பிடித்தால்*
*காணிப்பொன் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே!*

வைரம் முதலான கற்களைக் கட்டிய மோதிரம், தோடு, அரைஞாண் ஆகியவற்றை அணிந்து எட்டுத் திசைக்கு உரியவர் ஒருவரே ஆயினும் பல்கிட்டி எமன் உயிரைப் பற்றும் போது வீட்டில் உள்ள மரக்கைச் சட்டங்கூட நம்முடன் வரக் காண்கிறோமா? இல்லையே? என்று பாடுவதன் மூலம் எப்படி ஒன்றும் இன்றிப் பிறந்தோமோ அப்படியே நம் வாழ்க்கை முடியும் போது எதுவும் உடன் வாரா என்ற கருத்தை மீண்டும் வலியுறுத்துகின்றார். இனிப் பாடலைக் காணலாம்.

*கற்கட்டு மோதிரம் நற்கடுக் கன்அரை நாண்பூண்டு*
*திக்(கு) எட்டும் போற்றத் திசைக்(கு) ஒருத்தர் ஆனாலும்*
*பற்கிட்ட வேஎமன் உயிர் பந்தாடும் வேளையிலே*
*கைச்சட்டம் கூடவரக் காண்கிலமே நெஞ்சமே!*

நச்சுடைய நாகப் பாம்பை அணியாகப் பூண்ட பரமசிவனின் பொன் தாள் மேல் மலர் தூவித் தொழுது வணங்காமல் கையில் அழகிய வளையலும் காலிலே பாடகமும் உண்மையானது என்று இறுமாந்து இருக்கின்றாயே நெஞ்சமே!! என்ற பாடல் எதுவும் மெய்யானவை அல்ல என்ற கருத்தையே வலியுறுத்துகின்றது.

*பைஅரவம் பூண்ட பரமன்திருப் பொன்தாளைத்*
*துய்ய மலர்பறித்துத் தொழுது வணங்காமல்*
*கையில் அணிவளையும் காலில்இடும் பாடகமும்*
*மெய்என்(று) இறுமாந்து விட்டனையே நெஞ்சமே!*

நெஞ்சமே! உமையவளைத் தன்னுடலின் ஒருபாகத்தில் வைத்த அரனின் பொன் அனைய தாளைப் போற்றி ஒரு பொழுதும் வணங்காமல் சேர்த்த பொருள் அனைத்தையும் மண்ணில் புதைத்து வைக்க எதற்காகப் போக எண்ணினாய் என்ற பாடல், இதுவும் நிலையாமையை வலியுறுத்துவதே; பாடல் வருமாறு

*மாதுக்(கு) ஒருபாகம் வைத்தஅரன் பொன்தாளைப்*
*போதுக்கு ஒருபோதும் போற்றி வணங்காமல்*
*வாதுக்குத் தேடிஇந்த மண்ணில் புதைத்துவைத்தே*
*ஏதுக்குப் போகநீ எண்ணினை யேநெஞ்சமே!*

ஐந்தெழுத்து மந்திரம் உடையவன் அருளை எண்ணாமல் புலன் ஐந்தும் அதனை மறக்க நினைத்த நெஞ்சமே! நான்உனக்குச் சொல்வது என்னவென்றால் உன்னிடமுள்ள வஞ்சக எண்ணங்களை நீக்கி வேறு எண்ணங்கள் வராதபடி எண்ணுவாயாக! அவனுடைய செந்நிறத் தாளையே எண்ணுவாயாக! நெஞ்சமே!

*அஞ்சருளைப் போற்றி ஐந்து புலனைத்துறக்க*
*நெஞ்சே உனக்கு நினைவுநான் சொல்லுகிறேன்*
*வஞ்சகத்தை நீக்கி மறுநினைவு வாராமல்*
*செஞ்சரணத் தாளைச் சிந்தைசெய்வாய் நெஞ்சமே!*

அற்புதமாய்க் கிடைத்த இந்த உடலில் உள்ள உயிர் அடங்குவதற்கு முன் சற்குருவான இறைவனைப் போற்றித் தவஞ் செய்வது வாழாமல் உண்டான பொருள்கள். செம்பொன், பிறசொத்துக்கள், பெருமை மிக்க வாழ்வு ஆகியவற்றை நிலையானவை என்று நம்பிப் பாம்பின் வாயில் அகப்பட்ட தவளை போல நான் ஆகி விட்டேனே என்று தன்னிலை விளக்கமாகப் பாடும் பட்டினத்தார், இதே கருத்தைத் திருவேகம்ப மாலையிலும் பாடி இருப்பதைக் காணலாம்.

*அற்புதமாய் இந்தஉடல் ஆவி அடங்கும் முன்னே*
*சற்குருவைப் போற்றித் தவம்பெற்று வாழாமல் உற்பத்தி*
*செம்பொன் உடைமை பெரு வாழ்வைநம்பிச்*
*சர்ப்பத்தின் வாயில் தவளைபோல் ஆனேனே.*

இதே கருத்துள்ள திருவேகம்ப மாலையில் உள்ள பாடல்

*ஊரும் சதம்அல்ல உற்றார் சதம்அல்ல உற்றுப்பெற்ற*
*பேரும் சதம்அல்ல பெண்டிர் சதம்அல்ல பிள்ளைகளும்*
*சீரும் சதம்அல்ல செல்வம் சதம்அல்ல தேசத்தில்*
*யாரும் சதம்அல்ல நின்தாள் சதம்கச்சி ஏகம்பனே*

நெஞ்சமே! உறவினர் யார்? பெற்றார் யார்? உடன்பிறந்தார் யார்? மற்றுள்ளார் யார்? பிள்ளைகள் யார்? இவர்களெல்லாம் இருந்தும் என்ன பயன்? இறப்பு வருங்கால் உதவுவரோ? கறவைப் பசுவை இழந்த கன்று போல மனமுருகிச் சிற்றின்பத்தில் சேர்கின்றாயே?

*உற்றார்யார் பெற்றார்யார் உடன்பிறப்பார் பிள்ளைகள்ஆர்*
*மற்(று)ஆர் இருந்தால் என் மாளும்போ(து) உதவுவரோ*
*கற்றா இழந்த இளங்கன்(று) அது போலே உருகிச்*
*சிற்றாதிச் சிற்றின்பம் சேர்ந்தனையே நெஞ்சமே!*

*(- தொடரும்...)*

## பட்டினத்தார் பைந்தமிழ் - 17

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

திருவிடை மருதூர் தீந்தமிழ் ஈசனை நினைப்பற நினைந்து நித்தம் தொழும் பட்டினத்தார், தாம் செல்வச் செழிப்போடு வாழ்ந்த வாழ்க்கையிலிருந்து விடுதலையாகி வாழ்தற்குக் காரணமாக இருந்த திருமருதமர்ந்த தெய்வக் கூத்தனே! எனப் போற்றும் 25 ஆம் பாடலில், சாக்கிய நாயனாரை நினைவு படுத்தித் தமக்கு முத்திப் பேறருளுமாறு வேண்டுகிறார்.

*கல்லால் எறிந்த பொல்லாப் புத்தன்*
*நின் நினைந்து எறிந்த அதனால்*
*அன்னவன் தனக்கும் அருள்பிழைத் தின்றே!*

என்பது பட்டினத்தார் வாக்கு.

சாக்கிய நாயனார் - ஒருபௌத்தர், ஞானம் பெறுதற்குப் பலவற்றை ஓதியுணர்ந்தார். பிற சமயங்களை விடச் சைவ நன்னெறிகளே உயர்ந்தவை எனத் தன் பௌத்த உணர்வினின்றும் நீங்கத் தூண்டிய சிவனது அருளால் உணர்ந்து தனது பழைய சாக்கிய வேடத்துடனே சிவன்தாள் மறவாது வழிபாடியற்றி வந்தார்.

அவ்வழிபாட்டிற்குரிய மூர்த்தமாகக் கண்ணில் பட்டதொரு சிவலிங்கத்தைத் தத்துவார்த்துவமாக ஆராய்ந்தார். உலகப் பொருள் யாவும் அண்டத்திற்குள் அடக்கம் என்பதையே இந்த இலிங்க உரு உணர்த்துகிறது என உணர்ந்தார். பிறருக்குக் காணாத தத்துவம் அச்சிவலிங்கக் கல்லுக்குள் கலந்திருப்பதாக உணர்ந்து மகிழ்ந்தார், வைரத்தை வைரத்தால் அறுத்தல் போல செய்வது என் என அறியாதவராய் அருகில் கிடந்த கல்லினை எடுத்தார், அது சாக்கியருக்கு மலராகத் தெரிந்தது. சிவலிங்கத்தின் மீது வீசினார். இதனால் ஆன்மீக ஏகாந்த மயக்கம் கொண்டார்.

இறைவனும் குழந்தை காலால் உதைப்பதைத் தந்தை மகிழ்ச்சியாகக் கொள்வது போலக் கருதி மகிழ்ச்சியடைந்தார்.

நாளும் கல்லெறிந்து உணவை உண்ணும் வழக்கம் கொண்ட சாக்கியருக்குச் சோதனை வந்தது. அதுதான் ஒரு நாள் மறதியாக உணவு உண்ண அமர்ந்த போது

*எங்கள் பிரான் தன்னை எறியாது அயர்ந் தேன்யான்*

என எண்ணி வருந்தினார். இருக்கைவிட்டெழுந்தார். சிவலிங்கத் திருவுருவை நாடி ஓடினார். ஓடி வந்தவர் முன் சிவபெருமானே காட்சியளித்தாராம் என்கிறார் சேக்கிழார்.

இதற்கான காரணத்தைச் சேக்கிழார்,

*கொண்டதொரு கல்லெடுத்துக்*
*குறிகூடும் வகையறிய*
*உண்டிவினை ஒழித்தஞ்சி*
*ஓடிவரும் வேட்கையொடும்*
*கண்டருளும் கண்ணுதலார்*
*கருணைபொழி திருநோக்கால்*
*தொண்டர்எதிர் விசும்பில்*
*துணைவியொடும் தோன்றினார்*

என்றார். இதில் நாளும் கல் எடுத்துக் குறிதவறாமல் எறிந்து வந்த செயலைச் சிவபெருமான் அறிந்ததால் மட்டுமின்றிச்சாக்கியர் தம் எதிரே பரிமாறப்பட்ட உணவின் மீது நாட்டம் கொள்ளாது ஓடிவந்த உணர்வை நுகர்ந்ததால் சிவனே காட்சிதர வந்தார். நாச்சுவை தவிர்த்தவரே தவச்சுவை உணர முடியும் என்பது தான் சாக்கிய நாயனாரின் வரலாற்று மையம் ஆகும்.

செய்யும் சடங்கைவிட, செயல்புரியும் உள்ளத்தையே இறைவன் பிரசாதமாக ஏற்பான் என்பது கருத்து. இந்த வேறுபாடு மன்மதன் பூ எறிந்து சிவனது தவத்தைக் கலைத்த வரலாற்றால் வேறு பிரித்து உணரலாம்.

கல்லில் நார் உரிக்க முடியாது என்பர். ஆனால் அது முடியும் என்கிற மணிவாசகர் கல்நார் உரித்தென்ன என்னை உன்தன் கருணையினால் பொன்னார் கழல்பணித்து ஆண்டபிரான் என்றார். (தெள்.9) எனவே சாக்கியர் பெளத்த சமயத்தவராயினும் அவர் சிவனருள் கூடியதால் பௌத்தத்தை மறந்தார் என்கிறார் சேக்கிழார்.

இந்தப் பேருண்மைகளை நீள நினைந்த பட்டினத்தார் அன்னவன் தனக்கும் அருள் பிழைத்தின்றே என்றதால் தம்பொருட்டும் திருவருள் புரிவார் என்ற நம்பிக்கை கொண்டார் என்பது கருத்து.

அதாவது கல் எறிந்தவருக்குக் கருணை காட்டிய சிவம், செல்வமெல்லாவற்றையும் எறிந்த தமக்குக் கருணை காட்டாது ஒழியார் என்பதைப் பட்டினத்தார் நம்பினார் என்பது கருத்து, பாம்பறியும் பாம்பினகால் என்பது போலப் பட்டினத்தாராகிய ஓர் அடியார் தம் அன்பைப் புலப்படுத்துவதற்குரிய அளவு கோலாகச் சாக்கிய நாயனாரின் அன்பை நினைப்பித்தார் என்பதே கருத்தாம் எனலாம், இந்த உண்மைகளை யெல்லாம் கூட்டி உணரும் நிலையில் தான் பட்டினத்தார்,

*என்னைஇடுக்கண் களையா அல்லல் படுத்தாது*
*எழுநிலை மாடத்துச் செழுமுகில் உறங்க*
*அடித்து தட்டி எழுப்புவ போல*
*அருள்சுரந் தளிக்கும் அற்புதக் கூத்த!*

என்று கூறியதால் இறைவன் தொடர்ந்து தம்மை எழுநிலை மாடத்து உப்பரிகை வாழ்க்கையில் வாழவைக்காமல் தட்டி எழுப்பிப் புதுவாழ்வளித்ததாகக் கூறியது போற்றுதற்குரியதாகும்.

சாக்கியரைப் பௌத்த மயக்கத்திலிருந்து விடுபடச் செய்ய, தூங்கு பவரைத்தட்டி எழுப்பல் போல் தம்மைத் திருவிடை மருதூர் இறைவன் செல்வ வாழ்வினின்றும் விடுதலையடையச் செய்தான் என்பது சொந்த வாழ்வியலாகும்.

இப்படியாகச் சாக்கியரை நினைத்ததன் தொடர்ச்சியில் பட்டினத்தார் 28ஆம் பாடலில் இறைவனிடம் பேறுபெற்ற பல அடியார்களைப் போலத்தம்மை ஓர் அடியாராகக் கருதி அருள் புரிய வேண்டுகிறார். இவ்வேண்டுதல் புதுவிதமான உத்தியுடன் அமைந்துள்ளது.

மருதவாணரே! உன் அடியார் இருதிறத்தினர். ஒருபகுதியினர் உன்னைப் பாடிப்பரவிப் பேறுபெற்ற உத்தமர்கள், மற்றொரு பிரிவினர் – உன்னிடம் அன்புபூண்டு வணங்கிய வரகுண பாண்டியனைப் போன்ற பிரிவினர். உலகம் அனைத்திலும் உள்ள ஆட்சிக்கும் உரிமைக்கும் அவர்கள் சாட்சியாக உள்ளவர்கள். ஆனால் நானோ அவர்கள் போல் அல்லாதவன், உன்மீதான அன்பின் மிகுதிக்கு அவர்கள் அடையாள முடையவர்கள், ஆனால் நானோ அன்பில்லாத கீழ்வரம்புக்கு எல்லையானவன். எனவே என்னைத் தள்ளிவிடாது காப்பாற்றுவாயாக! என வேண்டுகிறார் பட்டினத்தார்.

கோடி உருத்திரரும், வானோர் தலைவனும் சந்திரனும் சூரியனும் மூன்றுகோடி முனிவர்கள், வித்தகப் பாடல் முத்திற அடியார் மற்றும் பெரிய அன்பின் வரகுண தேவர் போன்ற எண்ணிறந்தோர் உண்மையாகவே பாடிப்பரவிக் களிக்கின்றார்கள். ஆனால் மருதவாண! யான் ஒருவன் தான்,

*பத்தி என்பதோர் பாடும் இன்றிச்*
*சுத்தனாயினும் தோன்றாக் கடையேன்*
*நின்னை, இறைஞ்சிலன் ஏத்திலன் பெரும!*
*வாழ்த்திலன் ஆதலின் நானே*
*அமையும்! நலமில் வழிக்கே!*

என்றார்.

இதில் நின்பால் நலம் பொருந்துதல் இல்லாத தீய வழிக்கு நானே எடுத்துக்காட்டாயினேனே என ஏங்குவது மணிவாசகர் கைப்பிடித்த உத்திபோல் உள்ளது.

அதாவது கண்ணப்பன் ஒப்பதோர் அன்பு இன்மை கண்டபின் - என்ற திருக்கோத்தும்பி பாடல் வரிக்குப் பண்டித மணியார் நயங்கூறு வார்போலப் பட்டினத்தாரின் வாக்கை உணரவேண்டி உள்ளது.

உயர்ந்த அன்புக்குக் கண்ணப்பர் சான்று. ஆனால் நானோ அன்பின்மைக்குச் சான்று. அதாவது அன்பின் மேல் வரம்புக்குக் கண்ணப்பர் என்றால் கீழ் எல்லைக்கு நானே சான்று என்று மணிவாசகர் தம்மைத் தாழ்த்தி அடக்கமாகக் கூறிக் கொள்வது போலப் பட்டினத்தார் நலமில் வழிக்கு நானே அமையும் என்கிறார். நலமுடைவாழ் வெல்லாம் சிவ அடியார்கள் வாழ்ந்தாலும் அவர்போல் என்னால் வாழ முடியவில்லையே! என ஏங்குகிறார் பட்டினத்தார்!

கூறிய அடியார்களுள் தனித்து உணர வேண்டியவர் வரகுண தேவராவார். அவரைப் பட்டினத்தார் பெரிய அன்பின் வரகுணர் என்றார். இவர் ஒரு காலத்தில் பாண்டிய நாட்டை ஆண்டார். ஒரு நாள் வேட்டைக்குச் சென்று நாட்டுக்கு மீளுகையில் இவரது குதிரையானது அங்கே வழியில் தூங்கிய வேதியனைக் காலால் மிதித்துக் கொன்றதால் வரகுணரைப் பாவம் சூழ்ந்தது. இதற்கான கழுவாயைப் பெற மதுரை ஆலவாய் அண்ணலைப்பரவ, அண்ணலும் அசரீரி வழியாக, வரகுணனே! சோழன் படைஎடுத்து வரும் போது சோழ நாட்டு எல்லை வரை துரத்திச் செல்லும் நீ அங்குள்ள திருவிடை மருதூர் தலத்தால் உன் பாவம் நீங்கும் என்றபடிப் பாண்டியன். (வரகுணர்) பூசத்துறை என்ற தீர்த்தம் ஆடி நலம் பெற்றான், இதனால் வரகுணர் திருவிடை மருதூரிலேயே தங்கலானார்.

அப்போதுதான் வரகுணனின் பல்வேறு சிவபக்தி வெளிப்பட்டது என்பதைப் பட்டினத்தார் சில நிகழ்வுகளால் வரிசையாகக் கூறுகிறார்.

அரண்மனையில் திருடிய ஒருவனைக் காவலர்கள் வரகுணதேவ மன்னர்முன்னர் நிறுத்திய போது திருடனின் மேனியில் திருநீறு பூசியதால் அத்தோற்றம் சிவ அடியாராக நினைப்பித்ததால்

தண்டிக்காமல் விட்டாராம், இது வரகுணரின் திருநீற்றுப் பக்திக்குரிய அடையாளக் குறிப்பாகும்.

இரவில் நரிகளின் ஊளையைக் கேட்ட வரகுணர்க்கு அவ்வொலி அரகர என்பதாகக் கேட்டதாம். இதனால் சிவநாம பக்தி தெரிகிறது. இதன் வெளிப்பாடாக அரகர ஒலி எழுப்பி இறைவனை நினைப்பித்ததால் அந்நரிகளுக்குப் போர்வை தந்தாராம்.

ஒரு நாள் குளத்துத் தவளைகளெல்லாம் அரற்றின. அந்த அரற்றல் ஒலி வரகுணருக்குச் சிவனடியார்கள் சிவநாமத்தை ஒலித்த ஒலியாக இருந்ததாக நினைத்து அவைகள் உணவு இல்லாமல் சிவனை வேண்டுகின்றன என எண்ணி தின்னும் பொருளும் காசுகளும் குளத்தில் இறைத்தாராம், இது சிவனடியாரிடம் கொண்ட பக்தியைக் குறிக்கிறது.

அரண்மனை வளாகத்தில் காயப் போட்டிருந்த எள்ளை ஒரு பிடி எடுத்து உண்ட ஒருவழிப் போக்கனைக் காவலர், வரகுணர் முன்கொண்டு வந்து நிறுத்தி னர், காரணம் கேட்ட வரகுணரிடம் அவ்வழிப் போக்கன், வரும் பிறவியில் எள்ளை ஆட்டும் எருதாகப் பிறந்து வினையை ஆட்டும் சிவனுக்கு ஆளாக வேண்டிச் செய்ததாய்க் கூறினான். இத்தகு பக்தி தனக்கு இல்லையே என மனம் நொந்தாராம்.

ஒரு நாள் வரகுணர் திருவீதி உலா வந்தபோது ஒரு திருநீறு பூசிய வெள்ளிய மண்டை ஓட்டைப் பார்த்துத் தம் தலையும் இத்திருவிடைதூர் மண்ணில் இதுபோல் கிடக்க வேண்டும் என வேண்டிக் கொண்டாராம்.

ஒரு நாள் வரகுணர் திருக்கோயில் வலம் வந்த போது நாயின் கழிவுப் பொருள் கோயில் வளாகத்தில் கண்டு அதை யாரும் சுத்தம் செய்யாததால் தாமே எடுத்துத் தூய்மை செய்தாராம்.

ஒரு போது வழியிலே உதிர்ந்து கிடந்த வேப்பம் பழத்தைப் பார்த்த வரகுணர் இவை சிவலிங்கத் திருமேனிகளாகக் காணப்படுவதாய்க் கண்டு அவைகள் இனிமேல் மண்ணில் உதிராதவாறிருக்க விதானம் அமைத்தாராம்.

பெரிய புராணத்தில் இறைவனே வந்து கேட்க இயற்பகை நாயனார்தம் இல்லரசியைத் தந்தார் என்பது போல் அல்லாமல்

வரகுணர் தான் மணந்த சோழ மன்னன் மகளை மருதவாணருக்கே ஒப்படைத்தாராம். அதாவது தம்பால் சேரும் எல்லாப் பொருளும் இறைவனுக்கே என்ற முரட்டு உணர்வுடன் வாழ்ந்ததால் மணம் புரிந்து கொண்ட சோழமகள் சிவனுக்குரியதாக அன்போடு நினைந்து அர்ப்பணித்தாராம்.

ஆனால் சிவன் வரகுணரின் மீளா அடிமைத் திறம் வியந்து தன் சிவலிங்கத்திருமுடி மீது ஒரு பெண்ணின் கையிருப்ப தாகக்காட்சி தந்ததைக் கண்டு வியந்து தன் செயலுக்கு நாணி, மருதவாண! அடியேன் தொட்ட கை என்பதால் தான் தொட அஞ்சி இதுபோல் குறிப்பு காட்டினையோ என அரற்றினார். இதனால் மருதவாணர் வரகுணரைச் சோதிக்க விரும்பாமல் சென்னியில் முளைத்தகையை மறைத்துக் காட்டினார்.

இப்படியாகத் தன்னை மறந்த பக்திப் பிரேமையினால் வரகுணர் செய்த செயல்கள் பேரன்பின் வெளிப்பாடாக இருந்ததால் பட்டினத்தார் பெரிய அன்பின் வரகுணர் என்றார்.

ஆக அடியார் பக்திக்கு ஈடில்லை என்பதைப் பட்டினத்தார் வரகுணரை மையப்படுத்திக் காட்டியது போல அருளாளர் எவரும் அனுபவித்துக் காட்டினார் இல்லை என்றே கூறலாம்.

இத்தகு சீலம் மிக்க பத்திச் சிறப்பை மருதவாணர் வீற்றிருக்கும் திருவிடை மருதூரின் மீது செலுத்தினால் பாவம் கரந்தோடுமாம். எனவே பட்டினத்தார் பரவியபடி நாமும், மருதிடத்தான் என வாயாரச் சொல்லி அவனைக் கருதிட எல்லாம் கரந்தொழியும் என நம்புவோமாக!

---

**23.06.2018** அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் தமிழாகரர் தெ.முருகசாமி சுந்தர மூர்த்தி சுவாமிகள் பற்றி உரையாற்றினார்.

**04.07.2018** அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி முதலாமாண்டு வகுப்புகள் தொடக்க விழா நடைபெற்றது.

---

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### கொல்லாமை

### (உயிர்களைக் கொல்லாதிருத்தல்)

**1. அறவினை யாதுஎனின் கொல்லாமை கோறல்**
**பிறவினை எல்லாம் தரும்.**

அறவினை யாதுஎனின் - அறச் செயல் என்பது எது என்றால்; கொல்லாமை - உயிர்களைக் கொல்லாதிருத்தல்; கோறல் - உயிர்களைக் கொல்லுதல்; பிறவினை எல்லாம் தரும் - உயிரைக் கொல்வதால் உண்டாகும் பிற பாவங்களை எல்லாம் தரும்.

அறச்செயல் என்பது உயிர்களைக் கொல்லாதிருத்தல் ஆகும். உயிர்களைக் கொன்றால் அது பிற தீய வினைகளைத் தரும்.

**2. பகுத்துஉண்டு பல்உயிர் ஓம்புதல் நூலோர்**
**தொகுத்தவற்றுள் எல்லாம் தலை.**

பகுத்து உண்டு - பசித்த உயிருக்குப் பகுத்துக் கொடுத்துத் தான் உண்டு; பல் உயிர் ஓம்புதல் - பல உயிர்களையும் பாதுகாத்தல்; நூலோர் - சான்றோர்; தொகுத்தவற்றுள் எல்லாம் தலை - தொகுத்த அறங்களுக்குள் எல்லாம் முதன்மையானதாகும்.

பசித்த உயிருக்குப் பகுத்துக் கொடுத்துத் தானும் உண்டு பல உயிர்களையும் பாதுகாத்தல் சான்றோர் தொகுத்த அறங்களுக்குள் முதன்மையானது ஆகும்.

**3. ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றுஅதன்**
**பின்சாரப் பொய்யாமை நன்று.**

ஒன்றாக நல்லது கொல்லாமை - அறங்களுள் நல்லது என்று கருதப்படுவது உயிர்களைக் கொல்லாதிருத்தல்; மற்று அதன் பின்சார - அதற்குப் பின்னர் சார்ந்து நிற்க; பொய்யாமை நன்று - பொய் சொல்லாதிருத்தல் நன்று.

அறங்களுள் நல்ல ஒன்றாகக் கருதப்படுவது உயிர்களைக் கொல்லாதிருத்தல் ஆகும். அதனைச் சார்ந்து பொய் சொல்லாதிருத்தல் மிகவும் நன்றாகும்.

**4. நல்ஆறு எனப்படுவது யாதெனின் யாதுஒன்றும்**
**கொல்லாமை சூழும் நெறி.**

நல்ஆறு எனப்படுவது - நல்ல நெறி என்று சொல்லப்படுவது; யாது எனின் - எது என்றால்; யாது ஒன்றும் - எந்த உயிர் ஒன்றையும்; கொல்லாமை சூழும் நெறி - கொல்லாதிருக்கும் செயலைக் கருதும் நெறி.

நல்லநெறி என்று சொல்லப்படுவது எந்த உயிர் ஒன்றையும் கொல்லாதிருக்கும் செயலைக் கருதும் நெறியாகும்.

**5. நிலைஅஞ்சி நீத்தாருள் எல்லாம் கொலைஅஞ்சிக்**
**கொல்லாமை சூழ்வான் தலை.**

நிலைஅஞ்சி - பிறப்பு நிலைக்காக அச்சப்பட்டு; நீத்தாருள் எல்லாம் - துறவு மேற்கொண்டவர்களுக்குள் எல்லாம்; கொலை அஞ்சி - கொலை செய்தலுக்கு அஞ்சி; கொல்லாமை சூழ்வான் தலை - கொலை செய்யாதிருக்கக் கருதுபவனே முதன்மையானவன்.

பிறப்பு நிலைக்காக அச்சப்பட்டுத் துறவு மேற்கொண்டவர்களுக்குள் கொலை செய்தலுக்கு அஞ்சிக் கொலை செய்யாதிருக்க கருதுபவனே முதன்மையானவன் ஆவான்.

**6. கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் வாழ்நாள் மேல்**
**செல்லாது உயிர்உண்ணும் கூற்று.**

கொல்லாமை மேற்கொண்டு ஒழுகுவான் - கொல்லாமை என்னும் செயலை மேற்கொண்டு இருப்பவன்; வாழ்நாள் மேல் - வாழ் நாளின்மேல்; செல்லாது - செல்லமாட்டாது; உயிர் உண்ணும் கூற்று - உயிரைப் பறிக்கும் கூற்று.

கொல்லாமை என்னும் செயலை மேற்கொண்டு இருப்பவனின் வாழ்நாளின் மேல் அவனது உயிரைப் பறிக்கும் கூற்று செல்லமாட்டாது.

**7. தன்உயிர் நீப்பினும் செய்யற்க தான்பிறிது**
**இன்உயிர் நீக்கும் வினை.**

தன்உயிர் நீப்பினும் - தனது உயிர் நீங்கும் நிலை ஏற்பட்டாலும்;

செய்யற்க - செய்யக் கூடாது; தான்பிறிது இன்உயிர் - தான் பிற ஒன்றனுடைய இனிய உயிரை; நீக்கும் வினை - அதன் உடம்பிலிருந்து நீக்கும் செயல்;

தனது உயிர் நீங்கும் நிலை ஏற்பட்டாலும் பிற ஒன்றனுடைய இனிய உயிரை அதன் உடம்பிலிருந்து நீக்கும் செயலைச் செய்யக் கூடாது.

**8. நன்றுஆகும் ஆக்கம் பெரிதுஎனினும் சான்றோர்க்குக்**
**கொன்றுஆகும் ஆக்கம் கடை.**

நன்றுஆகும் ஆக்கம் - கொலையினால் நன்மை தரும் செல்வம்; பெரிது எனினும் - மிகவும் பெரியது என்றாலும்; சான்றோர்க்கு - துறவு கொண்ட சான்றோர்களுக்கு; கொன்று ஆகும் ஆக்கம் கடை - அக்கொலையினால் ஆகும் செல்வம் கடையானது ஆகும்.

கொலையினால் நன்மை தரும் செல்வம் ஒருவர்க்கு மிகவும் பெரியது என்றாலும் அக்கொலையினால் ஆகும் செல்வம் சான்றோர்க்குக் கடையாயதாகும்.

**9. கொலைவினையர் ஆகிய மாக்கள் புலைவினையர்**
**புன்மை தெரிவார் அகத்து.**

கொலைவினையர் ஆகிய மாக்கள் - கொலைத் தொழில் செய்கின்றவராகிய மக்கள்; புலைவினையர் - புலைத்தொழில் செய்கின்றவராவர்; புன்மை தெரிவார் அகத்து - கீழ்மையைத் தெரிந்தவர் உள்ளத்தில்.

கொலைத் தொழில் செய்கின்றவராகிய மக்கள் அதன் கீழ்மையைத் தெரிந்தவர் உள்ளத்தில் புலைத் தொழில் செய்கின்றவராகவே தெரிவர்.

**10. உயிர்உடம்பின் நீக்கியார் என்ப செயிர்உடம்பின்**
**செல்லாத்தீ வாழ்க்கை யவர்.**

உயிர்உடம்பின் நீக்கியார் என்ப - உயிர்களை அவை இருந்த உடம்பிலிருந்து நீக்கியவர்கள் என்று சொல்லுவர்; செயிர் உடம்பின் - நோய்பெற்ற உடம்பில்; செல்லாத் தீவாழ்க்கையவர் - நோய் நீங்காத வாழ்க்கையினை உடையவர்.

நோய்பெற்ற உடம்பில் நோய் நீங்காத வாழ்க்கையினை உடையவர் பிற உயிர்களை அவை இருந்த உடம்பிலிருந்து நீக்கியவர்கள் என்று சொல்லுவர்.

## நிலையாமை

**1. நில்லா தவற்றை நிலையின என்றுணரும்**
**புல்லறிவு ஆண்மை கடை.**

நில்லாதவற்றை - உலகில் நிலையில்லாத பொருள்களை; நிலையின - நிலையானவை; என்றுணரும் - என்று கருதுகின்ற; புல்லறிவு ஆண்மை - சிற்றறிவுடையராதல்; கடை - கடையானதாம்; இகழ்வானதாம்.

உலகில் நிலையில்லாத பொருள்களை நிலையானவை என்று கருதும் சிற்றறிவுடையராதல் மிகவும் இகழ்வானதாகும்.

**2. கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே பெருஞ்செல்வம்**
**போக்கும் அதுவிளிந் தற்று.**

கூத்தாட்டு அவைக்குழாத் தற்றே - கூத்தாடும் அரங்கில் கூடும் கூட்டம் போன்றது; பெருஞ்செல்வம் - சேர்ந்திருக்கும் பெரிய செல்வம்; போக்கும் - அச்செல்வம் நீங்குவதும்; அதுவிளிந்தற்று - கூத்துக்குக் கூடிய கூட்டம் கலைவது போலாகும்.

சேர்ந்திருக்கும் பெரிய செல்வம் கூத்தாடும் அரங்கில் கூடும் கூட்டம் போன்றது. அச்செல்வம் நீங்குவதும் கூத்துக்குக் கூடிய கூட்டம் கலைவது போலாகும்.

**3. அற்கா இயல்பிற்றுச் செல்வம் அதுபெற்றால்**
**அற்குப ஆங்கே செயல்.**

செல்வம் அற்கா இயல்பிற்று - செல்வமானது நிலையில்லாத இயல்பினை உடையது; அதுபெற்றால் - அச்செல்வத்தைப் பெற்றால்; அற்குப - நிலையானவற்றை; ஆங்கே செயல் - அப்பொழுதே செய்ய வேண்டும்.

நிலையில்லாதது செல்வம்; அதனைப் பெற்றால் அப்பொழுதே நிலையான செயல்களைச் செய்ய வேண்டும்.

**4. நாள்என ஒன்றுபோல் காட்டி உயிர்ஈரும்**
**வாள்அது உணர்வார்ப் பெறின்.**

நாள்என ஒன்றுபோல் காட்டி - வாழ்நாளில் ஒருநாள் என்பது

போல் காட்டி; உயிர்ஈரும் வாள்அது - உயிரைப் பறிக்கும் வாள் அது; உணர்வார்ப் பெறின் - அதனை உணர்பவர்களிடம் அமைந்தால்.

நாள் என்பது நிலையில்லாதது என்பதை உணர்பவர்கள் ஒவ்வொரு நாளும் இருப்பது போலக் காட்டி உயிரைப் பறிக்கும் வாள் என்பதை உணர்வர்.

**5. நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை**
**மேற்சென்று செய்யப் படும்.**

நாச்செற்று - நாவினை அடக்கி; விக்குள் மேல் வாராமுன் - விக்குள் மேல் எழுவதற்கு முன்னர்; நல்வினை - நல்வினையாகிய அறத்தை; மேற் சென்று - விரைந்து; செய்யப்படும் - செய்ய வேண்டும்.

நாவினால் வரும் பேச்சு அடக்கி விக்குள்மேல் எழுவதற்கு முன்னர் நல்வினையாகிய அறத்தை விரைந்து செய்ய வேண்டும்.

**6. நெருநல் உளன்ஒருவன் இன்றுஇல்லை என்னும்**
**பெருமை உடைத்துஇவ் உலகு.**

நெருநல் - நேற்று; உளன்ஒருவன் - உள்ளவன் ஒருவன்; இன்று இல்லை என்னும் - இன்று இல்லையானால் என்கின்ற; பெருமை உடைத்து இவ்வுலகு - நிலையாமை என்னும் பெருமையை இவ்வுலகம் மிகவும் உடையது.

நேற்று உள்ளவன் ஒருவன் இன்று இல்லையானான் என்னும் நிலையாமைப் பெருமையை உடையது இவ்வுலகம்.

**7. ஒருபொழுதும் வாழ்வது அறியார் கருதுப**
**கோடியும் அல்ல பல.**

ஒரு பொழுதும் - ஒரு பொழுதளவும்; வாழ்வது அறியார் தாம் உயிர் வாழ்வது பற்றி அறிய மாட்டாதவர்; கருதுப - நினைப்பார்கள்; கோடியும் அல்ல பல - கோடியளவு மட்டுமல்ல அதனினும் பல ஆகும்.

தம் வாழ்வு பற்றி ஒரு பொழுதளவும் அறிய மாட்டாதவர் கோடியளவு மட்டுமல்ல அதனினும் பலவாக நினைப்பார்கள்.

**8. குடம்பை தனித்துஒழியப் புள்பறந் தற்றே**
**உடம்போடு உயிரிடை நட்பு.**

குடம்பை தனித்து ஒழிய - தான் இருந்த கூடாகிய முட்டையைத் தனியே விட்டு; புள்பறந் தற்றே - பறவையின் குஞ்சு பறந்தது போலாகும்; உடம்போடு உயிரிடை நட்பு - உடம்புக்கும் உயிருக்கும் உள்ள தொடர்பு.

முட்டையை விட்டுப் பறவை பறந்து செல்வது போல் உடம்பைவிட்டு உயிர் பிரிந்து சென்றுவிடும். முட்டைக்கும் பறவைக்கும் உள்ள தொடர்பு தான் உயிருக்கும் உடம்புக்கும் உள்ள தொடர்பு.

**9. உறங்குவது போலும் சாக்காடு உறங்கி**
**விழிப்பது போலும் பிறப்பு.**

உறங்குவது போலும் சாக்காடு - இறப்பு என்பது உறங்குவது போல; உறங்கி விழிப்பது போலும் பிறப்பு - பிறப்பு என்பது உறங்கி விழிப்பது போல;

ஒருவனுக்கு இறப்பு என்பது உறக்கம் போன்றது; பிறப்பு என்பது உறங்கி விழிப்பது போன்றது.

**10. புக்கில் அமைந்தின்று கொல்லோ உடம்பினுள்**
**துச்சில் இருந்த உயிர்க்கு.**

புக்கில் அமைந்தின்று கொல்லோ - புகுவதற்கான இல்லம் அமையவில்லையோ? உடம்பினுள் - உடம்புக்குள்; துச்சில்இருந்த - ஒதுங்கி இருந்த ; உயிர்க்கு - உயிருக்கு.

உடம்புக்குள் ஒதுங்கி இருந்த உயிருக்கு அது போனதும் புகுதற்கான இல்லம் அமையவில்லையோ? அவ்வுயிருடன் கூடி நிற்கும் உடம்பு இல்லையாகும்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### நாகம் எய்தது

பாண்டியன் அனந்தகுணன் சிறந்த பண்பாளன் சிவச் சின்னங்களின் மெய்ப்பொருள் தெரிந்து எல்லையற்ற பக்திகொண்டு சிவநேசச் செல்வனாக விளங்கினான். நாடெங்கும் சைவமணம் நன்கு பரவியது. பாண்டித் திருநாடே சிவவேடம் கொண்டு சிறந்து விளங்கியது. பாண்டிப் பெருநாடு சிவத்திருநாடாகப் பொலிவதைக் கண்ட

சமணகுரவர் எட்டாயிரம் பேர்களுக்கும் பொறாமை உண்டாயிற்று. பொறாமையின் காரணமாக சிவபக்த சிகாமணியாம் அணந்தகுண பாண்டியனைக் கொல்ல வழி தேடினர். ஒரு காத அளவிற்கு யாகசாலை அமைத்தனர். அதிலே நெருப்பு வளர்க்கும் குண்டமும் அமைத்தனர். மிகவும் கோரமாக நாடு நடுங்கும் முறையில் யாகத்தைச் செய்தனர். யாகத்தின் விளைவாக குண்டத்திலிருந்து அரக்கன் ஒருவன் திடீரெனத் தோன்றினான். தலை படங்காட்டியது; வாய்இருள் காட்டியது; வளைந்த விஷப்பற்கள் வாய்க்கு வெளியே தெரிந்தன. கண்கள் தீ கக்கின. அவ் அவுணன் வெளிப்பட்டது ஒரு பெரிய மலையே பெயர்ந்து வந்ததுபோல இருந்தது. சினம் பொங்க, சமணர்களைப் பார்த்து எனக்குப் பசியும் தாகமும் அதிகமாக இருக்கிறது. உடனே சொல்லுங்கள். நான் என்ன செய்யவேண்டும் என்று வினவி இடிமுழக்கம் செய்தான். சமணர்களும், நீ வேகமாகச் சென்று பாண்டியனையும் அவனது ஊரையும் அழித்துவிட்டுவா என்று ஏவிவிட்டனர்.

பசியாலும் கோபத்தாலும் தூண்டப்பெற்ற அரக்கன் பெரும் பாம்பின் உருவம் எடுத்துக்கொண்டு மதுரை மாநகரத்தை நோக்கிப் புறப்பட்டான். பாம்பரக்கன் செல்லும் வழியெல்லாம் பாழ் ஆயிற்று. பசுமை கருகியது. நீர் வற்றியது. அதிவேகமாக வந்த பாம்பன் மதுரைக்கு அருகே மேற்குத் திசையில் வந்துவிட்டான். இதனை அறிந்த மக்கள் ஓடிச்சென்று பாண்டியனை அடிபணிந்து நாகத்தின் வருகையைப்பற்றி முறையிட்டனர். உடனே பாண்டியன், முன்பு யானையைக்கொன்று மதுரையைக் காத்த பெருவள்ளலாகிய சுந்தரேசப்பெருமானை நினைத்தான். இம்முறையும் அவரே காக்கவல்லர் என்று கருதி கடவுள் முன்பு சென்று பெருமானே ! சமணர்கள் ஏவிய பெரிய நாகப் பாம்பொன்று ஊரை அழிக்க வருகிறது. எளியேனுக்குக் கருணைகாட்டியருள்க என மனமுருகி வேண்டினான்.

சிவபெருமானிடம் விடைபெற்றுச் சென்றான் பாண்டியன். பின்பு பெருமானது திருவடிகளையே சிந்தித்த வண்ணம் வில்லையும்

அம்பையும் எடுத்துக் கொண்டு ஊரின் மேற்கு வாசலை அடைந்தான். பாம்பினைக் கண்டான் அணந்தகுணன். பெரிய ஆரவாரம் செய்தான். கையில் வில்லை எடுத்து நாண் பூட்டினான். பல வகையான அம்புகளையும், நெருப்புக் கணையையும் விடுத்தான். பாம்பு அத்தனை அம்புகளையும் கடித்து உமிழ்ந்து நாசம் செய்தது. பாண்டியனுக்குப் பொறுக்கவில்லை. சோமசுந்தரப் பெருமானின் திருவடிகளை உளமாரச் சிந்தனை செய்து அர்த்த சந்திரபாணம் ஒன்றைப் பிரயோகம் செய்தான். பாணம் பெரும்பாம்பின் உடலைச் சின்னாபின்னப்படுத்தியது. பாம்பரக்கன் பெரிய ஓசை செய்துகொண்டு அலறி விழுந்தான். மரண தேவதனையில் கொடிய விஷத்தைக் கக்கினான்.

கொடிய கருநாக விஷம் ஊர் முழுவதும் பரவியது. நகர மாந்தர் விஷத்தின் கடுமையால் மயங்கி வாடினர். நச்சு வாயு நகரை நரகம் ஆக்கிக்கொண்டிருந்தது. இது கண்ட பாண்டியன் அஞ்சினான், வருந்தினான், நேரே திருக்கோயில் சென்றான். அண்ணலைப் பார்த்து, ஆதி அந்தமாய் நிறைந்த சோதியே ! முன்பு ஒரு முறை தேவர்கள் வேண்ட நஞ்சினை அமுதாய் உண்டாய் ! யானையை மாய்த்து மதுரையைக் காத்த புண்ணியரே ! மதுரை மூதூர் விஷத்தால் வருந்துகிறது, விஷத்தைப் போக்கி மதுரையைக் காத்தருளும் என்று வேண்டினான்.

அன்பருக்கு எளியவரான சோமசுந்தரப் பெருமான் கருணை கொண்டார். தமது ஜடாமகுடத்திலே உள்ள பிறைச்சந்திரனிடமிருந்து அமுதத்தைச் சிறிதே சிந்தினார். பெருமான் அருளிச்சிந்திய அமுதத்துளி நகர் முழுவதும் பரவியது நஞ்சின் கடுமையையும், கொடுமையையும் போக்கி மதுரத்தை அளித்தது. மீண்டும் மதுரை மாநகரம் இனிமையும் தூய்மையும் பெற்றது. மக்கள் மகிழ்ந்தனர்; இன்பம் கொண்டாடினர்.

அணந்தகுண பாண்டியன் நாகாபரணரும், சந்திரசேகரருமான பெருமானுக்கு ஆளாகி ஆண்டு வரலானான்.

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

**திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!**